3rd September 1958] [Mr. Speaker]

| | |
|---|---|
| 23rd September (Tuesday) and 24th September (Wednesday) 1958. | The Madras Panchayats Bill, 1958. |
| 25th September 1958 (Thursday). | Non-official business. |
| 26th September 1958 (Friday). | Holiday. |
| 27th September 1958 (Saturday). | The Madras Panchayats Bill, 1958 —*cont.* |
| 28th September 1958 (Sunday). | Holiday. |
| 29th September 1958 (Monday) and 30th September 1958 (Tuesday). | Budget of the State Electricity Board. |

This is the provisional programme which is subject to modification if and when it becomes necessary. For the present, these are the decisions taken at the meeting of the Business Advisory Committee held to-day.

SRI M. D. RAMASAMY: Sir, may I know whether the programme will be circulated to all the Members?

MR. SPEAKER: Yes. It will be circulated to all the Members. I have only given advance notice of the programme.

## VI.—GOVERNMENT BILLS—*cont.*

### (4) THE MADRAS INDUSTRIAL ESTABLISHMENTS (NATIONAL AND FESTIVAL HOLIDAYS) BILL, 1958.

THE HON. SRI R. VENKATARAMAN: Mr. Speaker, I introduce the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill[a], 1958, and move—

"That the Bill be taken into consideration."

There is no provision in any of the existing labour enactments for the grant of holidays to employees in industrial establishments on important National and festival days. In regard to National holidays, the Government have been issuing appeals to the employers to declare Republic Day and Independence Day as paid holidays for workers. The number of festival holidays that are granted to the workers in a year vary from concern to concern. In 1957, the Textile Mill-owners and Labour at Coimbatore, at the instance of the Government, came to an agreement to grant paid holidays to the workers on Republic and Independence Days and also on five festivals during a year. Recently, specific provisions are being incorporated in enactments intended for particular industries and establishments, such as Catering Establishments and Beedi industry.

[a] Published in the *Fort St. George Gazette*, dated 25th June 1958.

[Sri R. Venkataraman] [3rd September 1958

The State Labour Advisory Board, in its meeting held in October 1956, suggested that the Government should make a beginning in the matter of provision of paid National and festival holidays to industrial workers. The question of evolving a uniform standard of paid National and festival holidays in industrial undertakings was also discussed at the 15th and the 16th sessions of the Standing Labour Committee held at New Delhi in April 1956 and October 1957 respectively. The Chairman of the Committee observed that there should be seven paid holidays, of which two should be National holidays and the rest festival holidays. The Government of India, however, do not propose to promote any legislation in this regard at present. In these circumstances, this Government have come forward to undertake the proposed legislation at State level.

1-00 p.m. The Bill aims at the provision of seven paid National and festival holidays each year to every person employed in an industrial establishment. It will apply to all factories as defined in the Factories Act; all establishments as defined in the Madras Shops and Establishments Act; and all plantations, as defined in the Plantations Labour Act. The Government have also the power to apply the provisions of the Act to any other establishment by notification. Industrial establishments under the control of the Central or any State Government, local authority, Reserve Bank of India, railway administration and mines or oil fields are exempted from the provisions of the Act. Employees in positions of management and those whose work involves travelling are also exempted. The Government may also, by notification, grant exemption to any establishment or class of establishments or person or class of persons.

Two of the holidays are National holidays, namely, Republic Day on the 26th January and Independence Day on the 15th August. The remaining five holidays have to be granted by the employer, for such festivals as may be specified for each establishment, by the Inspector appointed under the Act, in consultation with the employer and the employees. The Bill also provides for treating the first of May, namely, May Day, as one of the five festival holidays, if the majority of the employees so desire.

Every employee shall be paid wages for each of the holidays so allowed. Where an employee works on any such holiday, he can, at his option, claim either double wages for that day or single wages for that day and in addition avail himself of a substituted holiday on some other day.

Provision has also been made in the Bill for the protection of existing rights and privileges of employees, if they are more favourable.

The Bill provides for the appointment of Inspectors with the necessary powers for the enforcement of its provisions.

Government have the power to frame rules for carrying out the purposes of the Act.

Penalties have been provided for the contravention of the provisions of the Bill or rules, heavier penalties being provided for second and subsequent offences.

3rd September 1958]

MR. SPEAKER : Motion moved :

" That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958, be taken into consideration."

There are two amendments, one given notice of by Sri N. K. Palanisami and the other by Sri M. Kalyanasundaram.

SRI N. K. PALANISAMI : I am not moving my amendment.

MR. SPEAKER : Then Mr. Kalyanasundaram may move his amendment.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move :

" That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958, be referred to a Select Committee with instructions to report before the 10th September 1958."

The motion was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : If it is the desire of the Opposition to refer the Bill to a Select Committee, I have no objection. I accept the motion and the Bill may be referred to a Select Committee.

MR. SPEAKER : The Hon. Minister in charge of the Bill has accepted the amendment of Mr. Kalyanasundaram. I will put it to vote. The question is—

" That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958, be referred to a Select Committee with instructions to report before the 10th September 1958."

The motion was put and carried.

MR. SPEAKER : Now, Mr. Palanisami will speak.

THE HON. SRI C. SUBRAMANIAM : The motion for reference to a Select Committee has been put and carried. Where is now the question of further discussion in the matter?

MR. SPEAKER : Perhaps I am wrong. I shall allow Members to discuss the Bill so that the Select Committee may know what the views of the Members are.

THE HON. SRI C. SUBRAMANIAM : Then the motion which has been carried should be kept in abeyance and after discussion put to vote.

MR. SPEAKER : I take it that the House approves the suggestion of the Leader of the House. I should like to inform the House that we will rise for lunch at 1-30 p.m., reassemble at 2-30 p.m. and go on till we finish discussion of the Bill.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, 15, 16-வது தொழிலாளர்களுடைய மகாநாட்டிலே, எல்லா ராஜ்யங்களிலும் இம்மாதிரியான ஒரு சட்டம் கொண்டுவர வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டு, அந்த முடிவின் அடிப்படையிலே நமது சர்க்கார் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறார்கள். இதை நான் வரவேற்கிறேன். ஆனால், அதே சமயத்தில் எந்தக் கொள்கையுடன், எந்த நல்லெண்ணத்தோடு தொழி

[Sri N. K. Palanisami] [3rd September 1958

லாளர்களுக்கு லீவு வசதி கிடைக்க வேண்டுமென்று சர்க்கார் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறார்களோ, அந்தக் கொள்கைக்கு நேர் விரோதமான நிலைமை ஏற்படுமென்று முதல் பிரிவிலேயே நமக்கு நன்றாக தெரிகின்றது. 1947-ம் வருஷத்தில் **Madras Shops and Establishments Act** சட்டம் கொண்டுவந்த காலத்தில் இதே மாதிரி ஒரு பிரிவு இருந்தது. சர்க்கார் எட்டு மணி நேரம் என்று நிர்ணயித்தவுடன், சில கம்பெனிகள் 5-மணி நேர வேலையை எட்டு மணி நேரமாக உயர்த்தின. அதே மாதிரி ஒரு நிலைமை இப்பொழுதும் ஏற்படும். இப்பொழுது பல இடங்களில் 10 அல்லது 15 நாட்கள் விடுமுறை கொடுக்கிறார்கள். இந்த மசோதா சட்டமானவுடன், அவர்கள் 15 நாள் விடுமுறையைக் குறைத்து, சர்க்கார் நிர்ணயித்திருக்கும் நாட்களுக்குக் கொண்டு வரும் நிலைமை ஏற்படும். இப்பொழுது சிலர் அதிகப்படியான நேரம் வேலை வாங்குகிறார்கள் என்று தொழிலாளிகள் சொன்னால், அது **Shops and Establishments Act** படி இருக்கிறது. ஆகவே அதை **Refer** பண்ண முடியாது என்றும் சொல்லுகிறார்கள். உண்மையாக, தொழிலாளருக்கு நலம் கிடைக்க வேண்டுமென்று சர்க்கார் நினைத்தால், ஏற்கெனவே இருக்கக்கூடிய லீவு வசதிகளை குறைக்கக் கூடாது என்ற முறையில் இந்த மசோதாவைத் திருத்த வேண்டும். பல ஜில்லாக்களிலே இருக்கக்கூடிய பெரிய கம்பெனிகளில் 10 நாட்களுக்கு லீவு கொடுக்கிறார்கள். சென்னை போன்ற நகரங்களில் 10 நாட்களுக்கு அதிகப்படியாக லீவு கொடுக்கிறார்கள். ஆகவே, ஏழு நாட்களுக்கு பதிலாக குறைந்த பட்சம் 10 நாட்களாவது விடுமுறை அளிக்க வேண்டியது அவசியம். ஜனவரி 26, மே 1, ஆகஸ்டு 15, இன்னும் தீபாவளிப் பண்டிகை, பொங்கல் பண்டிகை, தமிழ் வருஷப் பிறப்பு ஆக மொத்தம் பத்து நாட்களுக்கு விடுமுறை அளிக்க வேண்டும். உலகம் பூராவும் இருக்கக்கூடிய தொழிலாளர்கள் மே தினத்தை ஒரு முக்கிய தினமாகக் கொண்டாடுகிறார்கள். எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் சரி, எந்தக் கொள்கையை உடையவர்களாயிருந்தாலும் சரி, தொழிலாளர்கள் இதை ஒரு முக்கிய தினமாகக் கொண்டாடுகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்பு இதே சபையில் இந்த மாதிரி முறையில் மசோதாக் கொண்டுவரப்படுமென்று அறிவித்தும் கூட, மே தினத்திற்காக விடுமுறை அளிக்கப்படவில்லை என்பதைப் பார்க்கும்பொழுது, அதை வருத்தத்துடன் எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. பெரும்பாலான முதலாளிகள் ஒத்துக்கொண்டால் மே தினத்திற்காக லீவு விடலாம் என்று இருக்கிறது. இது தொழிலாளர்களை மிகவும் பாதிக்கக் கூடிய விஷயம் ஆகும். ஏனென்றால், மே தினத்திற்காக எல்லா முதலாளிகளும் லீவு கொடுக்க மாட்டார்கள். ஆகவே, கண்டிப்பாக மே தினத்திற்கு விடுமுறை அளிக்க வேண்டுமென்ற முறை இருக்க வேண்டும்.

இந்த லீவு நாட்கள் ஏற்கெனவே விடுமுறை நாளாக இருக்கக்கூடிய ஞாயிற்றுக்கிழமை போன்ற நாட்களில் வந்தால், வேறு நாளை சம்பளத்துடன் லீவாக விடுவதற்கு முறை இருக்க வேண்டும். மேலும், ரெயில்வே, ரிசர்வ் பாங்கு, சுரங்கங்களில் வேலை பார்ப்பவர்களுக்கு இம்மசோதாவிலிருந்து விதி விலக்கு அளிக்கப்படுமென்று குறிப்பிட்டிருக்கிறது. இம்மாதிரி விதி விலக்கு அளிக்கும் பிரிவே இம் மசோதாவில் இருக்கக் கூடாது. இப்பொழுது **Madras Shops and Establishments Act** படி விதி விலக்கு அளித்திருப்பதைப் பார்த்தால், சிறிய கடைகளாயிருந்தால் 10 அல்லது 11 மணி நேரம் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. திட்டவட்டமாக இன்னாருக்குத்தான் விதி விலக்கு அளிக்கப்படுமென்று சட்டத்திலேயே சொல்ல வேண்டும். இந்த மாதிரி ஒரு நல்ல முறையில் இந்த மசோதாவைத் திருத்துவதுடன், இதை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **Sri M. P. SUBRAMANIAM** : கனம் அவைத் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த விடுமுறை மசோதாவின் நோக்கத்தை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். எனது நண்பர் குறிப்பிட்டதுபோல் இந்த 7 நாட்கள் போதாது என்றுதான் நான்

வலியுறுத்த விரும்புகிறேன். இரண்டு நாட்கள் தேசீய விடுமுறை நாட்களும், மீதி ஐந்து நாட்கள் தொழிலாளிகளும் முதலாளிகளும் ஒப்புக் கொண்ட விடுமுறை நாட்களும் ஆக ஏழு நாட்கள் விடுமுறையாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு கனம் அமைச்சர் அவர்கள் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறார்கள். ஆனால், இந்த இரண்டு நாட்களைத் தவிர இன்னும் சில முக்கியமான நாட்கள் தேசீய விடுமுறை நாட்களாக அவசியம் இருக்க வேண்டுமென்பது என்னுடைய விருப்பம். மே தினத்தை ஒரு முக்கிய கட்டாய விடுமுறை நாளாக உறுதியாக ஒப்புக் கொள்ளவேண்டும். இதில் எந்த விதமான அரசியல் வேறுபாடுகளுக்கும் இடமில்லை என்பதை இந்த அவையிலுள்ளவர்கள் பல சந்தர்ப்பங்களிலே எடுத்துக் கூறியிருக்கிறார்கள். பொதுவாக, உலகத்தில் ஏகாதிபத்திய நாடுகள், முதலாளி நாடுகள் உள்பட எல்லா நாடுகளும் மே தினத்தை ஒரு முக்கிய விடுமுறை தினமாக ஒப்புக் கொண்டிருக்கின்றன. இந்த நேரத்தில் நம்முடைய அரசாங்கமும் இதற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். ஆகவே, மே தினத்தையும் கட்டாய விடுமுறை நாளாக சேர்த்துவிடுவது மிகவும் அவசியம் என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன். ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு தனி சட்டம் இருக்கும்பொழுது, தமிழகத்தைப் பொறுத்தவரையில் பல தேசீய விடுமுறை நாட்களை நாம் ஏற்படுத்த வேண்டும். திருவள்ளுவர் தினம், பொங்கல் போன்ற பல முக்கியத்துவம் வாய்ந்த நாட்கள் நாம் எல்லோராலும் திருவிழா நாட்களாக அனுசரிக்கப் படுகின்றன. இந்த முக்கியத்துவத்தை உணர்ந்து ஒவ்வொரு ஆண்டும் பொங்கல் போன்ற திருவிழா நாட்களில் அமைச்சர்கள் தமிழகத்திற்கு நல்ல செய்திகளை அனுப்புகிறார்கள். தமிழகத்தில் இம்மாதிரி முக்கியத்துவம் வாய்ந்த நாட்கள் தேசீய திருவிழா நாட்களாகவும் விடுமுறை நாட்களாகவும் அனுசரிக்கப்படவேண்டும். ஆகவே, இவைகளை கணக்கில் எடுத்துக் கொண்டால் இந்த ஏழு விடுமுறை நாட்கள் போதவே போதாது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். ஆகவே, நண்பர் திரு பழனிசுவாமி அவர்கள் கூறியதுபோல் பத்து நாட்களாவது விடுமுறை நாட்களாக இருக்கவேண்டும். ஏற்கெனவே இருந்த அனுகூலங்கள் இந்த சட்டத்தினால் பாதிக்கப்படமாட்டாது என்று அமைச்சர் அவர்கள் உறுதிமொழி கூறியிருக்கிறார்கள். இந்த உறுதிமொழி நல்ல முறையில் காப்பாற்றப்பட வேண்டும். சட்டங்களில் சந்துகளை வைத்துக்கொண்டு, சட்டங்களுக்கு மாறாக நடைமுறையில் நடக்காமல் அரசாங்க இலாகா பார்த்துக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

இந்த மசோதாவிலுள்ள மூன்றாவது அல்லது 5-வது பிரிவை மீறினால், முதல் தடவையாக இருந்தால் அந்தத் தவறுக்கு ரூபாய் 25-ம், அதற்குப் பிறகு ரூபாய் 250 வரையிலும் அபராதம் விதிக்கலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒரு நாளைக்கு விடுமுறை நாள் கொடுக்காமல் 1,000 தொழிலாளர்களையும் வேலை வாங்கிவிட்டு, ஒரு முதலாளி ரூபாய் 25 அல்லது ரூபாய் 250 அபராதம் கட்டிவிடுவது மிகவும் சுலபமாக இருக்கும். இதனால் ஒரு பெரிய முதலாளிக்கு ஒரு நஷ்டமும் ஏற்பட்டுவிடாது. ரூபாய் 25 அபராதத்தை கட்டிக்கொள்ளலாம் என்று நினைத்து நூற்றுக் கணக்கான தொழிலாளர்களிடம் விடுமுறை கொடுக்காமல் வேலை வாங்கிவிடுவார்கள். ஆகவே, இந்த சட்டத்தை மீறுபவர்களுக்கு மூன்று மாதம், அல்லது ஆறு மாதம் ஜெயில் தண்டனை விதிக்கப்படவேண்டும். மசோதாவின் 9-வது பிரிவில் இன்ஸ்பெக்டரை தடுத்தால், அதற்கு மூன்று மாதம் ஜெயில் தண்டனையும் அல்லது ரூபாய் 500 அபராதமும் அல்லது இரண்டும் விதிக்கப்படும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதே தண்டனையை 3-வது அல்லது 5-வது பிரிவை மீறுபவர்களுக்கும் விதிக்க வேண்டுமென்பது என்னுடைய விருப்பம். ஒன்பதாவது பிரிவை ஒத்த தண்டனையை இதற்கும் விதிப்பதற்கு ஒப்புக் கொள்ள வேண்டுமென்பது என்னுடைய வேண்டுகோள்.

கடைசியாக, 10-வது பிரிவிலே மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கம், ஸ்தல-ஸ்தாபனம் இவைகளின் கீழே இருக்கக்கூடிய தொழில் ஸ்தாபனங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு விதிவிலக்கு அளிக்கப் படவேண்டும் என்று கண்டிருப்பது எந்த விதத்தில் பொருத்தம் என்பது

என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை. இப்படிப்பட்ட காரியங்களில் அரசாங்கம் முன்னிலையில் இருக்க வேண்டும் என்பதை பலமுறை நாம் எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறோம். அரசாங்கத்தின் கீழ் இருக்கும் தொழில் ஸ்தாபனங்களில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கும் இந்த விடுமுறை நாட்கள் அனுசரிக்கப்பட வேண்டியது மிகவும் அவசியம். ஏனென்றால், தொழிலாளர்கள் தனிப்பட்டவர்களைவிட அரசாங்கத்தின் கீழ் அதிகப்படியான நன்மையைப் பெறமுடியும். அரசாங்கம் தொழில் ஸ்தாபனங்களை அதிகப்படியான லாப நோக்கத்தோடு நடத்தாமல், தனியார் துறையில் கிடைக்கக் கூடிய நன்மைகளை விட கூடுதலான நன்மைகளை தொழிலாளர்கள் பெறும்படிச் செய்து, தனிப்பட்ட தொழில் அதிபர்களுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டும். ஆகவே, இந்த விதிவிலக்கு உறுதியாக இருக்கக்கூடாது என்று கனம் அமைச்சர் அவர்களுக்கும், அவையிலுள்ளவர்களுக்கும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

(Deputy Speaker in the Chair.)

அரசாங்கம் சில அதிகாரங்களை தாங்களே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவசியமான நேரத்தில் சில ஸ்தாபனங்களுக்கு இந்த சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கும் அதிகாரத்தை அரசாங்கம் மேற்கொண்டிருக்கிறார்கள்; இது அவசியமில்லை. அப்படி அவசியம் இருக்கும் பொழுது அதற்கான சட்டத்தை இந்த அவையில் கொண்டு வந்தால், தகுந்த காரணம் இருந்தால் இந்த அவை அதை ஒப்புக்கொள்ளும் என்று அமைச்சர் அவர்களுக்கு உறுதி கூறிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri J. MATHA GOWDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தொழிலாளர்களுக்கு நன்மை பயக்கும் முறையிலே இந்த மசோதாவைக் கொண்டுவந்ததற்காக அமைச்சர் அவர்களுக்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறேன். இரண்டாவது பிரிவிலே, தொழிலாளர்களுக்கு ரஜா நாட்களுக்கு சம்பளம் கொடுக்கும்பொழுது போனஸ், க்ராசுயிடி போன்றவைகள் சேர்த்துக் கொடுக்கப்பட மாட்டாது என்று கண்டிக்கிறது. சம்பளத்துடன் ரஜா கொடுக்கும் பொழுது, போனஸ், கிராசுயிடி மட்டும் அவர்களுக்கு ஏன் இல்லாமல் செய்ய வேண்டும் என்பது பற்றி அமைச்சர் அவர்கள் சற்று கவனிக்கவேண்டும். ரஜா நாட்களில் சம்பளத்தோடு போனஸ் முதலியவைகளும் சேர்த்துக்கொடுக்கப்பட வேண்டும். இந்த மசோதா செலக்ட் கமிட்டியின் பரிசீலனைக்கு போகப்போவதால், இதுபற்றி செலக்ட் கமிட்டியில் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏதோ சிலர் இப்பொழுது 10, 12 நாட்கள் விடுமுறை கொடுக்கிறார்கள் என்றும், இந்த சட்டத்தைப் பார்த்துவிட்டு அவர்கள் விடுமுறைகளை குறைத்துவிடுவார்கள் என்றும் ஸ்ரீ என். கே. பழனிசுவாமி அவர்கள் சொன்னார். இப்பொழுது கொடுக்கக் கூடிய 20 நாள் வேலை செய்தால் ஒரு நாள் ரஜா என்பதைத் தவிர, 7 நாட்கள் ரஜா கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்த சட்டம் இப்பொழுது கிடைக்கும் ரஜாவை அவ்வளவாக பாதிக்காது என்று நினைக்கிறேன். ஏழு நாட்கள் என்பதை 10 நாட்களாக உயர்த்துவதை நான் மிகவும் வரவேற்கிறேன்.

மூன்றாவது பிரிவில், மெஜாரிடி தொழிலாளர்கள் விருப்பப்பட்டால், முதலாளி மே தினத்திற்கு விடுமுறை கொடுக்கவேண்டும் என்று கண்டிருக்கிறது. மே தினத்திற்கு கட்டாயமாக விடுமுறை கொடுக்கவேண்டுமென்று தொழிலாளிகள் கேட்கவேண்டுமே தவிர, அங்கு இருக்கக்கூடிய தலைவர்களோ அல்லது அரசியல்வாதிகளோ கேட்பதற்கு சந்தர்ப்பம் இல்லை. தொழிலாளி விருப்பப்பட்டால் மே தினத்திற்கு முதலாளி விடுமுறை அளிக்க வேண்டுமென்று சட்டத்தில் அமைச்சர் அவர்கள் கண்டிருக்கிறார்கள். அதனுல் மே தினத்தை கட்டாய விடுமுறை தினமாகக் கொண்டுவர வேண்டுமென்பது அவசியமில்லை என்று கருதுகிறேன்.

அடுத்தபடியாக, ரூபாய் 25 அபராதம் விதித்தால், முதலாளிகள் அதை செலுத்திவிட்டு சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ளுவார்கள் என்று நண்பர் அவர்கள் சொன்னார்கள். அவர்கள் அபராதத்தை மட்டும்

3rd September 1958] [Sri J. Matha Gowder]

செலுத்தினால் போதாது. சட்டத்திற்கு புறம்பாக நடந்து கொண்டால் லேபர் கமிஷனர், லேபர் கோர்ட்டு வரையிலும் சென்று விடுமுறை நாளுக்குள்ள கூலியை வாங்கிவிடலாம். முதலாளி ரூபாய் 25 அபராதத்தை மட்டும் கட்டிவிட்டு தொழிலாளர்களுக்கு கொடுக்க வேண்டிய கூலியை கொடுக்காமல் இருக்க முடியாது. இது எல்லோருக்கும் தெரிந்ததே. அவர்கள் ஒருக்கால் சட்டத்தில் கண்டபடி ரஜா கொடுக்கவில்லையென்றால், லேபர் கமிஷனர் மூலம், லேபர் கோர்ட்டு மூலம் தொழிலாளர்கள் தங்கள் கூலியை பெறமுடியும்.

சிறு விஷயங்களுக்கெல்லாம் முதலாளிகளுக்கு ஜெயில் தண்டனை கொடுக்க வேண்டுமென்பது அவ்வளவு உசிதமல்ல. தொழிலாளியை மிகவும் பாதிக்கக்கூடிய அளவு ஒரு முக்கிய விதியை மீறினால் அதற்கு வேண்டுமானால் ஜெயில் தண்டனை கொடுக்கலாமே தவிர, ஒரு சாதாரண விஷயத்திற்கெல்லாம் ஜெயில் தண்டனை கொடுக்க வேண்டுமென்பது சரியல்ல. அம்மாதிரி செய்வது தொழில் அபிவிருத்தியை தடை செய்வதாகும்.

அரசாங்கத் தொழில் ஸ்தாபனங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு விதிவிலக்கு கொடுத்து விட்டு, வேறு துறையிலே வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு மட்டும் சட்டம் கொண்டுவந்திருப்பது சரியல்ல என்று கூறப்பட்டது. நகரசுத்தித் தொழிலாளர்களுக்கு இந்த சட்டத்தைக் கொண்டுவந்தால் மிகவும் நன்மையாக இருக்கும் என்று நினைக்கிறேன். நகரசுத்தித் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப்பட்டு வேலை செய்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய கூலி அதிகமில்லை. எந்த முனிசிபாலிடி 1 20
யிலும், எந்த பஞ்சாயத்து போர்டிலும் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய p.m.
கூலி மிகவும் குறைவு. அவர்கள் செய்யக்கூடிய வேலை மிகவும் கஷ்டமாக இருப்பதன் காரணமாக, அவர்களுக்கும் பண்டிகை நாட்களுக்கு ரஜா கொடுப்பது நல்லது என்று சொல்லிக் கொண்டு, இந்த மசோதாவை ஆதரித்து என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri S. PAKKIRISAMI PILLAI** : தலைவர் அவர்களே, இந்த மசோதாவைக் குறித்துப் பெரிய பிரசங்கம் நிகழ்த்த வேண்டியதில்லை. ஆனாலும், நமது தொழில் மந்திரி அவர்களுக்கு நமது பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அந்தப் பாராட்டுதல், இந்த விஷயத்தில் மற்ற மாகாணங்களைவிட நம் மாகாணம் முந்தி கொண்டதற்கு. தேசீய விடுமுறை அநேக தொழிற்சாலைகளில் அமலில் இருந்து வருகிறது. தேசீய விடுமுறை என்று சொல்லும்போது, மே தினம் சர்வ தேச விடுமுறையாகத் தொழிலாளருக்குக் கிடைக்க வேண்டுமென்று, தொழிலாளர் பகுதிகளிலெல்லாம் பேசிக் கொள்ளுகிறார்கள். மேல் நாடுகளில் அது கட்டாய விடுமுறையாக இருக்கிறது. இங்கேயும், ஒரு தேசீய விடுமுறை போல், மே தினத்தையும், சர்வ தேச விடுமுறையாகக் கட்டாயப்படுத்த வேண்டும் என்பது என் கோரிக்கை. இந்த விஷயத்திலும், நம் மாகாணம், முந்திக் கொள்ள வேண்டும், அதைக் கட்டாய விடுமுறையாக ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்கே சட்டத்தில் குறிப்பிட்டிருப்பது, குறைந்த பட்சம் ஐந்து நாட்கள் விடுமுறை விடவேண்டும் என்று. இது இதர தேசீய விடுமுறைகள் தவிர. இதற்கு மில் முதலாளிகள் ஒத்துக்கொண்டிருப்பதாக கனம் மந்திரி அவர்கள் குறிப்பிட்டார்கள். தென்னிந்திய மில் முதலாளிகளில் அநேகர்—இங்கே, பி அண்டு ஸி மில் போன்றவர்கள், பதினோரு நாட்கள் விடுகிறார்கள். அப்படி விடும்போது—பண்டிகை நாட்களே 11 நாட்களாகக் கிடைக்கும் போது—இந்த ஐந்து நாட்களுக்கு அவர்கள் ஒத்துக்கொண்டார்கள் என்பது அதிசயம் இல்லை. இந்த மசோதா சட்டமாக வரும்போது, ஐந்து நாட்களுக்கு அதிகமாகக்கிடைக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்ய வழியில்லை. ஆகவே இந்த ஐந்து நாட்கள் போதாது. பெரிய தொழிற்சாலைகளில் அல்லது சிறிய கைத்தொழிற்சாலைகளில் ஏற்கெனவே கொடுத்து வரும் நாட்களைக் குறைத்து விடுவார்களோ என்ற ஐயம் ஏற்படுகிறது. மில் தொழிலாளிகள், ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் என்று

வெவ்வேறு மதத்தினர்கள். ஆகவே அவர்கள் வெவ்வேறு பண்டிகை நாட்களை உடையவர்கள். அப்படி இருக்கும்போது, அவர்களுக்கு, இந்த ஐந்து நாட்கள் போதாது. இதை யெல்லாம் யோசித்தே, நம் சர்க்கார் 24 நாட்களாக நிர்ணயித்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அவ்வளவு அதிகமாக இல்லாவிட்டாலும், நியாயமான அளவுக்கு, எல்லா மதத்தினரும் அனுபவிக்கக் கூடிய அளவுக்கு, இதை, 11 அல்லது 12 நாட்களாகவாவது, அதற்குக் குறையாமல் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

"எஸ்ஸென்ஷியல் சர்வீஸ்" என்று சொல்லி சில அலுவலகங்களில் பண்டிகை நாட்களில் லீவே விடுவதில்லை. முக்கியமாக எலெக்டிரிஸிடி டிபார்ட்மெண்டில் விடுமுறையை மறுத்து விடுகிறார்கள். (கனம் ஸி. சுப்பிரமணியம் : எலெக்டிரிஸிடி வேண்டாமா ?) அதற்குப் புது ஆட்களை வைத்துக்கொள்ள வேண்டும். ஸர்ப்ளஸ் ஆட்கள் வைத்துக்கொள்ள வேண்டும். அப்படி வைத்துக்கொண்டு, நிரந்தர வேலை ஆட்களுக்கு லீவு கொடுக்க வேண்டும். இது எல்லா தொழிலாளர்களுக்கும் சம நீதி வழங்கும் நிலையில் அமைய வேண்டும். நியாயமான அடிப்படையில் நிறுவவேண்டும். தொழிலாளிக்குத் தொழிலாளி வித்தியாசம் இல்லாமல், அரசாங்கத்தார் எப்படி அரசாங்க ஊழியர்களுக்கு செய்கிறார்களோ அதே போல், முதலாளிகளுக்குப் பயப்படாமல், விடுமுறை நாட்களை அதிகப் படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri M. KALYANASUNDARAM** : ஸார், இந்த மசோதாவை நான் முழு மனதோடு வரவேற்கிறேன். நான் கூறும் யோசனைகளை அமைச்சரவர்கள் ஏற்றுக் கொண்டாலும் சரி, ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் சரி, இந்த மசோதாவைக் கொண்டு வந்ததற்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். செலக்ட் கமிட்டிக்கு மசோதாவை அனுப்பவேண்டுமென்று கோரிக்கையை அவர் ஒப்புக்கொண்ட முறையானது, அது எந்த நோக்கத்தோடு இருந்தாலும் அதைப்பற்றி நான் வருந்தவில்லை. செலக்ட் கமிட்டிக்கு அனுப்புவதை அவர்கள் ஒரு அளவு கோபத்தோடு ஒப்புக்கொண்டிருந்தாலும் அதற்காக நான் வருந்தவில்லை. வேண்டுமென்றால், நாளைக்கும், நாளை மறுநாளும் நேரம் இருக்கிறது. இரண்டு மணி நேரம் மசோதாவைப் பரிசீலித்து, 19-ம் தேதிக்குள் நிறைவேற்றலாம் என்று என்னுடைய கட்சியின் சார்பாக அவர்களுக்கு உறுதி கூறுகிறேன். ஆகையால் இந்த மசோதாவைக் கொண்டு வந்தற்குரிய பாராட்டு அவர்களுக்குக் குறைந்துவிடாது. செலக்ட் கமிட்டிக்கு விட வேண்டும் என்று நாங்கள் சொன்னதற்குக் காரணம், அதன் நோக்கம், சில சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும், அவைகளை செலக்ட் கமிட்டியில் செய்யலாம் என்பதே. சபையில் பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள், 7 தினங்கள் போதாது என்று. அதைப் பரிசீலனை செய்ய வேண்டும். அதற்கு சிரமங்கள் இருந்தால், ஏழு தினங்களையேகூட ஒத்துக்கொள்ளுகிறோம். ஆனாலும், அதிகப்படியாக செய்ய முடியுமா என்று பரிசீலனை செய்யவேண்டும்.

மே தினத்தைப் பற்றிக் கூறும்போது, அதைக் கட்டாய விடுமுறையாகச் செய்ய வேண்டும். காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் சொன்னார்கள், தொழிலாளிகளே தொழில் தலைவர்களிடம் கோரி அடையவேண்டும் என்று அதே வாதம் குடியரசு தினம், சுதந்திர தினம் இவற்றிற்கும் பொருந்தும். ஆகவே அந்த வாதம் இங்கு பொருந்தாது. ஆனால் இப்பொழுது, அது "ப்ரொவைசோ" வில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையிலாவது, அதைக் கட்டாயமாக்க வேண்டும். ஆனால் கனம் அங்கத்தினருடைய வாதம் சரியில்லை என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

விதிவிலக்குகள் சம்பந்தமாக சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இதற்கு வேண்டிய அதிகாரத்தை சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டியதுதான். அதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். அதிகாரத்தை உபயோகிக்கும் காலத்தில் சர்க்கார், இலாகாவின் பொறுப்புக்கே அதை விட்டுவிடக் கூடாது. விதிவிலக்கு கொடுக்கக்கூடிய நாட்களை, இராஜ்யத்தில்

இருக்கக்கூடிய ஸ்டேட் லேபர் அட்வைசரி போர்ட் (ஆலோசனைக் குழு) முன்பு வைத்து, விதிவிலக்குக் கொடுக்கும் முன்பாக எல்லா அம்சங்களையும் விவாதித்து, தொழிலாளிகள் பிரதிநிதிகளின் சம்மதம் பெற்று, அதைச் செய்ய வேண்டும். இது சம்பந்தமாகச் சில திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்பது என் அபிப்பிராயம். ரெயில்வே, ஸ்தல ஸ்தாபனங்கள், இராஜ்ய சர்க்கார் பிரிவுகள் இவைகளுக்கு நிரந்தரமாக விதிவிலக்கு அளிப்பது நியாயமல்ல என்பது என் அபிப்பிராயம். மேஜர் பஞ்சாயத்துகளில் கூட, நகரசுத்தி தொழிலாளர்களுக்கு லீவு கிடைப்பது என்பது உரிமையாகக் கிடையாது. தர்மத்திற்கு, நிர்வாகிகளே பார்த்து, விட்டால் தான் விட்டது. சம்பளத்தோடு கட்டாய லீவு என்ற நிலைமை ஏற்பட வேண்டும். விதி விலக்கு இல்லாமல், கனம் மாதா கௌடர் சொன்னது போல், நகரசுத்தி தொழிலாளிகளுக்கு லீவு கட்டாயம் கிடைக்கவேண்டும்.

சட்டத்தின்கீழ் வகுக்கும் விதிகளையெல்லாம், இந்த சபை முன்பு வைக்க வேண்டும் என்று இருக்கிறது. அப்படி இருக்கும்போது, விதி விலக்குகளும்கூட சபை முன்பு வைக்கப்பட வேண்டும் என்பதையும், செலக்ட் கமிட்டி பரிசீலனை செய்து, எல்லோரும் ஒப்புக் கொள்ளக்கூடிய, ஏகோபித்த ஆதரவுடன் இந்த மசோதா செலக்ட் கமிட்டிக்குப் போய் திரும்பி வரவேண்டும் என்று கூறிக்கொண்டு, என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சாதாரணமாக நாம் தொழிலாளர்களைப்பற்றி நினைக்கும்போது நமக்கு யார் யாரிடம் தொடர்பு இருக்கிறதோ அவர்களைப்பற்றிதான் நினைக்கும்படியாக இருக்கிறது, அப்படியேதான் நாமும் நினைக்கிறோம். உதாரணமாக கனம் பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் தொழிலாளர்களைப் பற்றி நினைக்கும்போது பி. அண்ட் சி. மில் தொழிலாளர்களைப்பற்றி தான் நினைப்பார். அதைப்போலவே கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் தொழிலாளர்களைப்பற்றி நினைக்கும்போது பெரிய தொழிற்சாலைகளில் வேலை செய்து வரும் தொழிலாளர்களைப்பற்றிதான் நினைப்பார். இன்றைக்குப் பார்த்தால் எந்த விதமான லீவு வசதியும் இல்லாமல் சுமார் 5,600 பாக்டரிகள் இருக்கின்றன. அப்படிப்பட்ட பாக்டரிகளில் வேலை செய்து வரும் தொழிலாளர்களுக்கு எந்த விதமான லீவு வசதியும் இல்லாமல் அவர்கள் வேலை செய்து வருகிறார்கள். அவர்களைப்பற்றியும் நாம் கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டும். இப்படிப்பட்ட தொழிலாளர்களைத்தான் நாம் முதலில் பார்க்கவேண்டும். அப்படிப்பட்டவர்களுக்கு எப்படி நன்மை செய்யலாம், அவர்களுடைய நிலைமை என்ன என்பதைப்பற்றி பரிசீலனை செய்துதான் அவர்களுக்கு எந்த விதத்திலாவது நன்மை செய்யவேண்டும் என்ற கருத்துடன் தான் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. பாக்டரி சட்டத்திலுள்ள இருபது நாட்கள் லீவைத்தவிர அவர்களுக்கு வேறு எந்தவிதமான லீவும் கிடையாது. அவர்களுக்கு எந்தவிதமான பண்டிகை, தேசிய விடுமுறைகள் கிடையாது. அவ்வாறு அவர்களுடைய நிலைமையைப் பார்க்கும்போது நாம் எந்த அளவுக்கு சட்டம் செய்தால் சிறு தொழிலாளர்களுக்கும், சிறு தொழிற்சாலைகளும் பாதிக்காமல் நல்ல முறையில் இதை அமுல் நடத்த முடியும், இது அவர்களுக்கு எந்த அளவுக்குப் பொருந்தும் என்பதையெல்லாம் பரிசீலனை செய்து பார்த்ததன் பிறகுதான் இப்படிப்பட்ட ஒரு சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம். அப்படி பரிசீலனை செய்துதான் அவர்களுக்கு இப்படிப்பட்ட ஏழு நாட்கள் லீவு வேண்டும் என்று இதைக் கொண்டு வந்தோம். நான் கனம் பக்கிரிசாமி பிள்ளை அவர்களுக்குச் சொல்லுகிறேன் பி. அண்ட் சி மில், மதுரை மில், மற்றும் இதர தென்னிந்திய மில்கள் எல்லாவற்றையும் நான் சுற்றிப் பார்த்து வந்தேன். அப்படிச் சுற்றி வந்து பார்த்த பிறகும் சமரசம் செய்த பிறகும் அவர்களுக்கு ஏழு நாட்கள் லீவு கொடுக்கவேண்டும் என்று சொல்லியும் அவர்களுக்கு இரண்டு அல்லது மூன்று அல்லது நான்கு அல்லது ஐந்து, நாட்களுக்கு கூட லீவு கொடுக்கப்படாமல் இருப்பதை நாம் பார்க்கிறோம். இது வரையிலும் அங்குள்ள தொழிலாளர்களுக்கு எந்த விதமான லீவு

[Sri R. Venkataraman] [3rd September 1958

வசதியும் கொடுத்ததாகத் தெரியவில்லை என்பதையும் அங்குள்ள நிலை எப்படி இருக்கிறது என்பதையும் எல்லோரும் பார்க்கவேண்டும் என்று தாழ்மையுடன் அவருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்தச் சட்டத்தை நாம் கொண்டு வரும்போது பெருவாரியாக இருக்க்கூடிய தொழிற்சாலைகளுக்கு இது எப்படி பொருந்தும். அவர்களிடத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு ஏற்கெனவே கொடுக்கப்பட்டு வரும் இருபது நாள் லீவு அவர்களுக்கு கொடுக்கப்படுமா என்பதையெல்லாம் நாம் பார்த்துத்தான் இதைச் செய்ய வேண்டியதாக இருக்கிறது.

அதே சமயத்தில் இன்னொரு ஷரத்தும் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதாவது ஷாப் சட்டத்தின் மூலமாக ஒரு தொழிற்சாலையில் வேலை பார்க்கும் தொழிலாளர்களுக்கு எந்த விதமான சலுகைகள் இருக்கின்றனவோ அப்படிப்பட்ட சலுகைகள் இந்த சட்டத்தினால் பாதிக்காது என்பதும் அப்படிப்பட்ட சலுகைகள் அவர்களுக்கு நீடித்தே கிடைக்கும் என்ற பாதுகாப்பும் இந்தச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி 11 -வது க்ளாஸைப் படித்துப் பார்த்தால் நன்றாகத் தெரியும்.

11. ". . . . . Nothing contained in this Act shall affect any rights or privileges which any employee is entitled to, on the date on which this Act comes into force under any other law, contract, custom or usage, if such rights or privileges are more favourable to him than those to which he would be entitled under this Act."

ஆகவே இப்படிப்பட்ட ஒரு ஷரத்தினால் எந்த விதமான கஷ்டமும் இருக்காது எனபதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக விதிவிலக்கு கொடுத்திருப்பது சம்பந்தமாக சொல்லப்பட்டது. நமக்கு பரிபூரணமாக நியாயம் பிற்காலத்தில் நமக்கு வேண்டியதாக இருக்கிறது. அப்படிப்பட்ட விதி விலக்கு இல்லா விட்டால் நாம் பிற்காலத்தில் பல கஷ்டங்களை எதிர்பார்க்க வேண்டியதாக இருக்கும். திடீர் திடீரென்று பல்வேறு கஷ்டங்கள் நமக்கு வரலாம். அவைகளை சமாளிப்பதற்கு இப்படிப்பட்ட விதி விலக்கு இருக்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. இப்பொழுது மின்சாரம் இருக்கிறது, நீர்ப்பாசனம் இருக்கிறது, தண்ணீர் சப்ளை இருக்கிறது. இப்படிப்பட்ட பல எசென்ஷியல் சாவீசுகள் இருக்கின்றன. அவைகளுக்கு எல்லாம் சில விதிவிலக்கு கொடுக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. சில சமயங்களில் அவைகளின் முக்கியத்துவம் நமக்கு வேண்டியதாக இருக்கும். நமக்கு அதிகாரம் இல்லாவிட்டால் நம்மால் ஒன்றும் செய்யமுடியாது. அதற்காகத்தான் நம்மிடம் அதிகாரத்தைதவைத்க்கொண்டால் எந்த விதமான கஷ்டம் வந்தாலும் அதை சமாளித்துக்கொள்ளலாம் என்பதற்காகத்தான் இந்த விதி விலக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்காரிடம் அதிகாரத்தை வைத்துக்கொண்டால் நெருக்கடி வருகிற சமயத்தில் அதிகாரத்தை உபயோகித்துக்கொள்ளலாம் என்பதுதான் நோக்கம். சர்க்காருக்கு அதிகாரம் இல்லையென்றால் நெருக்கடியை சமாளிக்க முடியாது. அப்படிப்பட்ட அதிகாரம் இல்லாமல் இருந்தால் அது நிர்வாகத்திற்கு பொருத்தமானது அல்ல. அதற்காகத்தான் இதை வைத்துக்கொண்டிருக்கிறோம். இப்பொழுது ஷாப் ஆக்டை எடுத்துக்கொண்டால் அதன் மூலம் எவ்வளவோ தொழிற்சாலைகளுக்கு இரண்டு வருஷங்களில் எவ்வளவோ விதிவிலக்கு கொடுத்திருக்கிறோம். அது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். இப்படிப்பட்ட அதிகாரம் சர்க்காரிடம் இல்லாவிட்டால் நிர்வாகத்தை நடத்துவது கஷ்டமாக இருக்கும். அதற்காகத்தான் இதைப் போட்டிருக்கிறோம்.

அடுத்தபடியாக, இந்த ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் சென்னை ராஜ்யத்தில் நாம் அதிகமாக தொழில்களை தேசியமாக்கவில்லை. இரண்டு தொழில்களைத்தான் நாம் தேசியமாக்கி இருக்கிறோம். அதில் ஒன்று நம்மைவிட்டு போய்விடப்போகிறது. பாக்கி ஒன்றுதான் இருக்கும். கன்யா

குமரியிலிருந்து நமக்கு ஒன்று கிடைத்தது. மணவாளகுறிச்சியிலுள்ள இலிமினேட் பாக்டரி நம்மை விட்டு மத்திய அரசாங்கத்திற்குப் போகப்போகிறது. பாக்கி ஒன்றுதான். அதாவது பஸ் ட்ரான்ஸ்போர்ட் ஒன்றுதான் இருக்கும். அது ஒன்றை வைத்துக்கொண்டுதான் சர்க்கார் நடத்துகிறார்கள். அவர்களுக்கு ஏற்கெனவே அநேகம் லீவு நாட்கள் கொடுக்கப்பட்டு வருகிறது. இது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அதனால் அவர்களுக்கு என்று இந்தச்சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று நினைக்கவேண்டாம். மற்ற சிறிய தொழிற்சாலைகளுக்கு பொருத்தமாக இருக்கவேண்டும் என்பதற்குத்தான் கொண்டு வரப்பட்டிருக்கிறது. பஸ் ட்ரான்ஸ்போர்ட்டுக்கு இது தேவையில்லை. சர்க்கார் எடுத்து நடத்தும் ஸ்தாபனங்களுக்கு சர்வீஸ் கண்டிஷன்கள், காண்டக்ட் ரூல்கள் எல்லாம் இருக்கின்றன. அவர்களுக்கு பண்டிகை லீவுகள் ஏற்கெனவே இருக்கின்றன. தொழிற்சங்க சட்டம் இல்லாமலேயே அவர்கள் பல வசதிகளை அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள். இதனால் சர்க்கார் சிப்பந்திகளுக்கு தனியாக சட்டம் தேவையில்லை. அதனால் தான் இப்படிப்பட்ட விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்குமட்டும் என்பது இல்லை. அவர்களுக்கும், லோகல் போர்ட் சம்பந்தமாக இருக்கிறவர்களுக்கும் இப்படிப்பட்ட சலுகைகள் இருக்கவேண்டும் என்று போடப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு எந்த அளவுக்கு இருக்கவேண்டுமோ அந்த அளவுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது இருக்கிற நிலைமையில் பாக்டரி தொழிலாளர்களுக்கு உடனடியாக இதைக்கொண்டுவரவேண்டும் என்பதற்காகத்தான் இதைக் கொண்டு வந்திருக்கிறோம். இதை யார்யாருக்கு விஸ்தரிக்கலாம் என்பதைப்பற்றி பின்னாடி பரிசீலனை செய்து விஸ்தரிக்கலாம்.

அடுத்தபடியாக குற்றத்தைப்பற்றியும் தண்டனையைப்பற்றியும் சொல்லப்பட்டது. இன்னும் அதிகப்படியான தண்டனை விதிக்கவேண்டும் என்று கனம் அங்கத்தினர் சுப்ரமணியம் அவர்கள் சொன்னார். சாதாரணமாக தண்டனை மூலமாக சட்டங்களை அமுல் நடத்துவது என்பது முடியாத காரியம். அதில் எனக்கு நம்பிக்கை இல்லை. உண்மையான தொழிலாளர்களுக்கு பலன் கிடைக்கவேண்டும் என்று நினைத்தால் நியாயமான முறையில் சட்டங்களை இயற்றி அவைகள் நல்ல முறையில் தொழிலாளர்களுக்கு பயன்படும் முறையில் அமுல் நடத்தவேண்டுமே தவிர, தண்டனை மூலம் நல்ல முறையில் அமுல் நடத்த முடியாது. பரஸ்பரம் நல்லெண்ணம் படைத்தவர்களாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நாம் இயற்றும் சட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்றலாம். கோர்ட்டு, சட்டம் தண்டனை முதலியவைகளை வைத்துக்கொண்டிருந்தால் நல்ல சூழ் நிலை இல்லாமல் தொல்லைகள் வளர்ந்து கொண்டேதான் போகும். மற்ற இடங்களில் காணப்படும் சுமுகமான உறவு இங்கு காணவே முடியாது. குறைந்த அளவு அபராதம் போடப்பட்டிருக்கிறது என்று கனம் மாதா கௌடர் சொன்னார். இப்பொழுது லீவு நாட்களில் வேலை வாங்கினால் இரண்டு மடங்கு சம்பளம் கொடுப்பதோடு தண்டனையும் கொடுக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் சம்பளத்தை மட்டும் கொடுத்து விட்டு ஏமாற்றி விட முடியாது.

**May Day**-யை கட்டாய விடுமுறையாக்கவேண்டும் என்றும் சொல்லப்பட்டது. அதில் கருத்து வேற்றுமை இருக்கிறது. எந்தத் தொழிலாளர்கள் மே டே வேண்டும் என்று கேட்கிறார்களோ அவர்களுக்குக் கொடுக்கலாம் என்று விதி இருக்கிறது. வேண்டாம் என்கிறவர்களுக்கு கட்டாயப்படுத்துவதில் பயனில்லை. இதைப்பற்றி முதலாளியும் தொழிலாளர்களும் சமரசம் செய்துகொண்டு லீவு விட்டுக்கொள்ள்லாம் என்று இருக்கிறது. இதற்கு சர்க்காருடைய உதவி தேவை இல்லை. எந்த இடத்திலாவது தொழிலாளர்கள் மெஜாரிட்டியாக இதுவேண்டும் என்று கேட்கிறார்களோ அங்கே விட்டுக்கொள்ளலாம். அவர்கள் மே டே-க்கு லீவு வேண்டும் என்று கேட்டால் முதலாளி கட்டாயமாக லீவு கொடுக்கவேண்டியதுதான். அதனால்தான் இதை கட்டாயமாக முக்கியமான லீவாக செய்யவில்லை.

[Sri R. Venkataraman] [3rd September 1958

கனம் கலியாணசுந்தரம் அவர்கள் இதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டும் என்று திருத்தம் கொண்டுவந்தது எனக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணியது. இந்தச் சட்டத்தை எவ்வளவு சீக்கிரமாகக் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டும் என்று நினைக்கிறோமோ அவ்வளவு சீக்கிரமாகக் கொண்டு வரவேண்டும் என்று நினைத்தோம். ஆனால் அவர் பொறுக்குக் கமிட்டிக்கு கொண்டுபோகவேண்டும் என்று கேட்டது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. தொழிலாளர்களுக்கு அதிகமாக பாடுபடுகிறோம் என்று சொல்லக்கூடியவர், அதிலும் எங்களைவிட அதிகமாக தொழிலாளர்களுக்கு என்று பாடுபடுகிறோம் என்று சொல்லக் கூடியவர் இதை ஒத்திப்போடவேண்டும் என்று சொன்னதுதான் எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவர் சொல்வது தவறு என்பதைக் காட்டுவதற்காகத்தான் அதற்கு நான் ஒத்துக்கொண்டேன். ஆகவே இந்தச் சட்டம் எவ்வளவு சீக்கிரத்தில் நிறைவேற்றப்பட்டு அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் நிறைவேற்றவேண்டும். அதற்காக எல்லோரும் இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958, be referred to a Select Committee to consider the Bill and report before the 10th September 1958 and that the following Members be elected to serve on such a Select Committee :—

1. The Hon. Sri R. Venkataraman.
2. Sri P. G. Karuthiruman.
3. ,, S. Lazar.
4. ,, T. T. Daniel.
5. ,, Urkavalan.
6. ,, J. Matha Gowder.
7. Srimathi Hemalatha Devi.
8. Sri D. Dasarathan.
9. Srimathi Rajathi Kunjithapatham.
10. Sri M. P. Sarathi.
11. ,, K. Ramachandran.
12. ,, S. A. M. Annamalai.
13. ,, K. Sattanatha Karalayar.
14. ,, S. Pakkirisami Pillai.
15. ,, V. K. Kothandaraman."

The motion was put and carried.

DEPUTY SPEAKER : I nominate the Hon. Sri R. Venkataraman to be the Chairman of the Select Committee.

(5) THE MADRAS CITY IMPROVEMENT TRUST (AMENDMENT) BILL, 1958.

DEPUTY SPEAKER : I suggest that we may sit for a few more minutes and finish the next Bill also, namely, the Madras City Improvement Trust (Amendment) Bill, 1958.